# அத்வைத பஞ்சரத்னம்

(ஜீவனும், ப்ரம்மமும் வெவ்வேறான இரண்டல்ல என்பதைக்கூறும் ரத்தினம் போன்ற ஐந்து ச்லோகங்கள் கொண்டது.)

**நாஹம் தே$^3$ஹோ நேந்த்$^3$ரியாண்யந்தரங்கோ$^3$**
**நாஹங்கார: ப்ராண வர்கோ$^3$ ந புத்$^3$தி$^4$: ।**
**தா$^3$ராபத்ய க்ஷேத்ர வித்தாதி$^3$ தூ$^3$ர:**
**ஸாஜீ நித்ய: ப்ரத்யகா$^3$த்மா சிவோ(அ)ஹம் ॥** 1

நான் தேகம் அல்ல. இந்திரியங்கள் அல்ல. மனம் அல்ல. அஹங்காரம் (நாணுணர்வு) அல்ல. (ஐந்து வகையான பிராணக் கூட்டம் அல்ல. புத்தி அல்ல. (நான்) மனைவி, பிள்ளை, இருப்பிடம், பணம் முதலியவைகளிலிருந்து வெகு தூரத்தில் இருப்பவன். (இவைகளுடன் எனக்கு கொஞ்சமும் ஸம்பந்தம் கிடையாது.) நான் ஸாக்ஷி (மாத்ரமாயிருப்பவன்), என்றுமுள்ளவன், உள் விளங்கும் ஆத்மவஸ்து, சிவம்.

(அனைத்தையும் அறியும் போதிலும், அந்த அனைத்தில் எதனாலும் பாதிப்புறாத தால் ஆத்மாவானது ஸாக்ஷி எனப்படும். அமைதி, அன்பு, நன்மை, மங்களம், அத்வைதம் ஆகியன சிவம் எனப்படும்.)

**ரஜ்ஜ்வக்ஜ்ஞானாத்3 - பா4தி ரஜ்ஜெள யதா2(அ)ஹி:**
**ஸ்வாத்மாஜ்ஞானாதா3த்மனோ ஜீவபா3வ: ।**
**ஆப்தோக்த்யா(அ)ஹிப்ரா4ந்தி நாசே ஸ ரஜ்ஜு:**
**ஜீவோ நாஹம் தேசிகோக்த்யா சிவோ (அ) ஹம் ॥** 2

இது கயிறு என்று தெரிந்துகொள்ளாததால் எவ்வாறு கயிற்றில் பாம்பு தோன்றுகிறதோ (ஒருவன் கயிற்றைப் பாம்பாக எண்ணி விடுகிறானோ, அது போலவே) தன் ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாததால், தனக்கு ஜீவத் தன்மை (ஏற்படுத்திக்கொள்கிறான்.) நண்பனின் வார்த்தையால் (அதாவது யாரேனும் அன்பர் அது கயிறு என்று கூறுவதால்) பாம்பு என்ற பிரமை நீங்கிய உடனே, அது கயிறாகத் தோன் துகிறது. (அதுபோல்) குருவின் உபதேசத்தால் நான் ஜீவன் அல்ல, நான் சிவம் (என்று தொந்து கொண்டேன்).

**ஆபா$^3$தீத$^3$ம் விச்வமாத்மந்யஸத்யம்**
**ஸத்யஜ்ஞானானந்த$^3$ ரூபே விமோஹாத் ।**
**நித்$^3$ராமோஹாத் ஸ்வப்னவத் தந்ந ஸத்யம்**
**சுத்$^3$த$^4$: பூர்ணோ நித்ய ஏக: சிவோ(அ)ஹம் ॥** 3

துக்கம் என்ற மயக்கத்தால் ஸ்வப்னம் (தோன்றுவது) போல, ஸச்சிதானந்த

ஸ்வரூபமான ஆத்ழாவில் அக்ஞானத்தால், பொய்யான இந்தப் பிரபஞ்சம்'தோன்றுகிறது; அது உண்மையல்ல. நான் பரிசுத்தமானதும், பூர்ணமானதும், அழிவற்றதும், ஒன்றானதுமான சிவம்.

**நாஹம் ஜாதோ ந ப்ரவ்ருத்³தோ ந நஷ்டோ**
**தே³ஹஸ்யோக்தா: ப்ராக்ருதா: ஸர்வதர்மா: ।**
**கர்த்ருத்வாதி³ச்சிந்மயஸ்யாஸ்தி நாஹாங்காரஸ்யைவ**
**ஹ்யாதமநோ மே சிவோ(அ)ஹம் ॥** 4

நான் பிறப்பு எடுத்த (ஒரு ஜீவன் அல்ல, வளர்பவன் அல்ல, அழிப்பவன் அல்ல. ப்ருக்ருதி (மாயை) யால் ஏற்பட்ட எல்லா தர்மங்களும் தேகத்தினுடையவை (யே ஆத்மாவுடையவை அல்ல என்று) சொல்லப்பட்டிருக்கின்றன, கர்த்ருத்வம் முதலியன அஹங்காரத்தினுடையவை தானேயன்றி, ஞான ஸ்வரூபமான ஆத்மா வாக இருக்கும் எனக்கு இல்லை. நான் சிவம்.

**மத்தோ நாந்யத் கிஞ்சித³த்ராஸ்தி விச்வம்**
**ஸத்யம் பா³ஹ்யம் வஸ்து மாயோபக்லுப்தம் ।**
**ஆத³ர்சாந்தர் - பா⁴ஸமாநஸ்ய துல்யம்,**
**மய்யத்³வைதே பா⁴தி தஸ்மாத் - சிவோ(அ)ஹம் ॥** 5

இங்கு, என்னைக்காட்டிலும் வேறான உண்மையாகப் பிரபஞ்சம் ஒன்றும் இல்லை. மாயையால் ஏற்பட்டுள்ள வெளிப்பொருள். அத்வைதமான என்னிடம் கண்ணாடிக்குள் தோன்றும் பொருளுக்கு ஸம்மாக விளங்குகிறது. ஆகையால் நான் சிவம்.

